# VÎRAPATNI

(KOVALAN KATHAI)

THIRD EDITION

AUTHOR
D. SUBBIAH PILLAI,
ALANGADU, P.O.
MUTUPET S.I.Ry.



Re. 1—0—0

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மா வட்டம்.

# வீரபத்தினி.

சென்னை, சிலோன் துரைத்தனத்தார் அங்கீகரித்தது.

# வீரபத்தினி

(கோவலன் கதை.)


சு. அ இராமசாமிப்புலவர்.
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.



மூன்றும் பதிப்பு.

ஆக்கியோன் :

து. சுப்பையா பிள்ளை,

ஆலங்காடு போஸ்டு,

முத்துப்பேட்டை வழி

காபிரைட்] 1928 [ஒரு ரூபா.

## FOREWORD

BY

**M. R. Ry. S. Anavaratavinayakam Pillai,**

**Avl., M. A., L. T.**

*Lecturer in Tamil, Ceylon University College, Formerly Chairman, Board of Studies in Tamil and Editor, Tamil Lexicon, University of Madras.*

---

I have been asked to write a foreword to the **Virapatni**, the story of Kovalan-Kannaki, and I do so with pleasure. The story is an ancient one quite familiar to all Tamils, and was first recorded in the famous Tamil epic of the Anklet, **Silappadhikaram**. There is a later ballad-like composition known as Kovalan-Katai and fathered on Puhalendi. In recent times the story has been dramatised for stage purposes by several writers who have freely altered it to suit their individual tastes. There are also some abridgments of the **Silappadhikaram** in Tamil prose, like the **Kannaki** and the **Silap-padhikara-k-Katai**. The **Virapatni** also professes to be a prose version of the **Silappadhikaram** but appears to me to excel others in certain important respects. In the first place, it is a closer version of the epic. Then quotations

from the original are more frequent and it would appear some taste has been displayed in the choice of the lines quoted. Another feature which is peculiar to this book is the attempt at elaborate narration of the stories that are merely referred to or mentioned briefly in the original. Thus, the book is no doubt a useful addition to the already existing literature dealing with the Kovalan-Kannaki story. I have reason to think that the author Mr. D. Subbiah Pillai has been engaged in writing this book for sometime, and find evidence in it to say that he has made a very careful study of the original epic. The book has been written in elegant Tamil and furnished with a glossary of difficult words and explanatory notes on proper names. I would recommend it safely for use in High School and College classes as a Tamil text book for detailed or non-detailed study.

**S. A. Vinayakam Pillai,**
LECTURER IN TAMIL,
*Ceylon University College.*

Colombo,
17th April, 1926.

உ

# முகவுரை.

**க**ற்பின் திட்பமும் ஒழுக்கத் திறனும் வினையின் வலியும் பிறவும் மருவிய **வீரபத்தினி** கதை எல்லாச் சுவைகளும் நிரம்பியது; **கண்ணகி—கோவலன்** வரலாற்றைக் கூறுவது. கண்ணகி, தன்னுடைய கற்பின் வன்மையாற் காட்டிய வீரத்தைப் பாராட்டி, **வீரபத்தினி** என்னும் பெயர், அத் தெய்வக் கற்பினளுக்கு முன்னோரால் இடப்பட்டது. இக் கதை நிகழ்ந்த காலத்திலேயே இருந்த **இளங்கோவடிகள்,** இதனைச் **சிலப்பதிகாரம்** என்னும் பெயரால் தேனினும் பாகினும் இனிக்கும் மதுரமொழிகளை அடுக்கிப் பாடியருளினர். மேன்மைசான்ற ஆசிரியராகிய அவ் இளங்கோவடிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றி எழுதப் பெற்றது இவ் **வீரபத்தினி.**

எவ்வாற்றானும் தலைசிறந்த, மெய்ம்மையும் தெய்விகமும் வாய்ந்த, **கண்ணகி கதை** தமிழுலகத்து நன்கு பரவவில்லை யென்பது ஒருதலை. தமிழ்நாட்டிலே நடந்ததும் தமிழ்மக்களாற் பொன்னினும் மணியினும் போற்றத் தக்கதும் ஆகிய இந்த அரும்பெரும் சரிதை அங்ஙனம் பரவாதது பண்டுள்ளோர் உரைநடை யெழுதிப் பரப்பாமை யாற் போலும்.

இச் சிறந்த கதையை மாணவர்களும் பிறரும் எளிதிற் கற்றறியும் பான்மையில் வெளிப்படுத்த வேண்டு

மென்னும் பேரவா இதை எழுதும்படி என்னைத் தூண்டிற்று.

எனது சிற்றறிவுக்கு எட்டியவரையில் கிளைக் கதைகள் பலவற்றை இயன்றமட்டில் விளக்கி, நூலைத் தெள்ளிய நடையில் எழுதியிருக்கிறேன். இதில், சிலப்பதிகாரத்திலிருந் தெடுத்த, இனிமையாகவும் எடுத்துக்காட்டாகவும் உள்ள, பல அடிகள் ஆங்காங்கே சேர்க்கப்பட்டிருக்கின்றன.

சிலப்பதிகாரத்தை ஆராய்ந்து வீரபத்தினியை எழுதுங்காலத்து அடியேன்பால் அன்புபாராட்டி, ஐயங்கள் தீர அறிவுறுத்தியும், ஒப்பு நோக்கியும் பேருதவி செய்த பெருந்தகை ஸ்ரீமான் எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை (எம். ஏ. எல். டி.,) அவர்களுக்கு அடியேன் செய்யும் கைம்மாறு என்றென்றும் நன்றி பாராட்டிப் போற்றுவதே.

எனது அறிவுக் குறைவால் இதில் ஏதேனும் பிழைகள் நேர்ந்திருத்தல் கூடும். அவற்றை அறிஞர்கள் எனக்குத் தெரிவிப்பார்கள் என்றும், அங்ஙனம் தெரிவிப்பவைகளை அன்புடன் ஏற்று மறுபதிப்பில் திருத்திக் கொள்ளலாகும் என்றும் எதிர்பார்த்திருக்கிறேன்.

சாதி மதம் முதலான வேற்றுமைகளின்றி, தமிழ் கற்றோர் எல்லோருக்கும் பயன் தரத்தக்க இக்கதை யாவரிடத்தும் பரவி நிலவும் வண்ணம் திருவருள் கூட்டுவதாக.

து. சு.

இராமநாதபுரம் சமஸ்தான வித்வானும்
சிதம்பரம் ஸ்ரீ மீனாக்ஷிகாலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய,
ஸ்ரீமாந்.

## சர்க்கரை இராமசாமிப்புலவரவர்கள் இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

கற்பினுக் கரசி யாய கண்ணகி சரிதந் தன்னை
யற்புத னாய்ந்து செந்தே னாமெனக் கற்றோர் கொள்ளப்
பொற்புற வியற்றி யீந்தான் புவிபுக ழாலங் காட்டுக்
கற்பகச் சிதம்ப ரேந்த்ரன் கழறொழு தியலூ றேர்ந்தோன்.

கங்கையின் குலத்தோன் கற்றோர் களுக்கெலா மினிய நண்பன்
திங்களங் கண்ணி வேய்ந்த சிவபிரா னடியார்க் கன்பன்
மங்கள சுகுண னார்ந்த வர்த்தகத் திலுஞ் சிறந்தோன்
எங்கள்கண் மணிக ளாக இலங்கு சுப் பைய வேளே.

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீட்சகரும்
“அலங்கியல்விளக்கம்” நூலாசிரியரும்
யாழ்ப்பாணம்
பரமேச்வரக் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதரும் ஆகிய
ஸ்ரீமாந்.

## க. சு. நவநீதகிருஷ்ண பாரதி அவர்கள்

பாடியவை.

சீரணி காதற் கற்புயர் வீரம்
திகழ்தருமுத் தமிழெனு மினிய
பேரமு தூட்டி முச்சலங் காட்டும்
பெருமைசால் சிலப்பதி காரச்

சாரமிஃ தெனத்தேன் றெளிவெனத் தமிழின்
    தழைவென யாவருஞ் சாற்ற
வீரபத்தினிப்பேர் பெறுமுறை நூலை
    மேதினிக் களித்துவாழ்ந் தனனே.

ஆங்கையங் குலத்தை நலந்தரு மதியைக்
    கன்னிமுத் தமிழெனு மகளை
மங்கலம் நிறைய மணந்தொளிர் தனத்தான்
    மால்சிதம் பரனடி மனத்தான்
இங்கித கவிஞன் இறைவியை வழுத்து
    மியல்பினன் கற்றவ ரினத்தான்
தெங்குசூ ழாலங் காட்டினைத் தழைக்கச்
    செயுமுகிற் சுப்பைய வேளே.

குலசேகரன்பட்டினம், திருவள்ளுவரகம்,

திருவாளர்.

## ப. இராமநாதபிள்ளை அவர்கள்

பாடியது.

நானிலம் புரக்கும் மூவேந்தர் நாட்டில்
இலகும் அறம்பொருள் இன்ப மென்னும்
முப்பாற் பொருளும் முறைமையி னமைத்துச்
செப்பத் துணிந்த சேரர் இளங்கோ
அடிகள் தாமும் அப்பொருண் மருவ
இயலிசை நாடகம் என்னும் யாப்பால்
"அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவ தூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்"
சூழ்வினைச் சிலம்பு காரணமாக
நாட்டினர் சிலப்பதி காரநற் காதை;

அதனையே, இற்றைஞான் றுள்ளார் இனிதினுணரப்
பாட்டிடை யிட்ட உரைநடை வகையால்
நாட்டவர் மகிழ நற்றமிழ் மொழியால்
அடிகள் அடக்கிய அருங்கதை முழுவதும்
படியினில் விரித்துப் பயில்வோர் போற்ற
வீரபத் தினியெனும் விழைபெயர் நிறீஇ
ஆலங் காட்டினுக் கணிசெய் வேளாண்
தோன்றல் துரைசாமி ஈன்ற குரிசில்
ஆங்கிலப் பழக்கமும் அருந்தொழின் மாண்பும்
பாங்குற வமைந்தவென் பயனுறு தோழன்
தமிழ்நூற் றேர்ச்சியும் தக்க இசையும்
பொருந்த வாய்த்த புலவர் தலைமணி
ஈந்தனன் உலகிற் கிசைசேர்
சுப்பையா பிள்ளை யெனுந்தூ யோனே.

---

## ஆலங்காடு தமிழ் வித்துவான்

## திருவாளர்—வை. செல்லையாச் செட்டியார்

அவர்கள் பாடியவை.

பொன்னுகு மெனப்புலவர் போற்றிடமுத் தமிழிலங்கப்
புகலுஞ் சேரர்
மன்னுக வருமிளங்கோ வடிகளறம் பொருளின்ப
மருவ நீடும்
பன்னுறுஞ் செழுந்தமிழ்க்கோர் பாக்கியமா மெனப்புகன்ற
பழுதி லாத
தன்னேரில் சிலப்பதிகாரப்பெருங்காப் பியமதனைச்
சால்பி னுய்த்தே.

ஒப்பரிதா யொளிர்வீர பத்தினியென் றபிதானம்
    ஒளிரச் சூட்டி
யப்பெருங்காப் பியச்சார மிஃதெனப்புத் தமுதமென
    அறிஞர் போற்றச்
செப்பரிதாம் உரைநடையாற் செய்யுளிடை யிட்டமைத்தே
    செழுந்தே னென்ன
வைப்பெனயா வரும்புகழ மகிழ்ந்தளித்தான் யாவனெனில்
    வகுப்பன் மாதோ.

*

செந்தமிழி னிலக்கியமு மிலக்கணமுஞ் செவ்வையுறத்
    தேர்ந்த சீலன்
தந்திமுகன் அடிமறவாச் சற்குணனுங் கங்கைகுலத்
    தலைவன் யாருஞ்
சிந்தனைசெய் திருமால வனத்துறையுஞ் சிதம்பரவேள்
    திருத்தாட் கன்பன்
சுந்தரஞ்சேர் துரைச்சாமி வள்ளலருள் சுப்பைய
    சுகுணன் மாதோ.

இலங்கை சர்வ கலாசாலைத் தமிழ்ப் போதகாசிரியரும்

சென்னை சர்வ கலாசாலைத்

தமிழ் ஆலோசனைச் சபை மாஜி அக்கிராசனரும்

அக் கலாசாலைத் தமிழகராதிப் பேராசிரியருமாகிய

ஸ்ரீமான். எஸ். அனவரத விநாயகம்பிள்ளை யவர்கள்

(எம். ஏ., எல். டி.) எழுதிய

# ஆங்கில முகவுரையின்

## மொழி பெயர்ப்பு

**வீரபத்தினி** (கோவலன்—கண்ணகி சரித்திரம்) என்ற இந்நூலுக்கு முகவுரை எழுதும்படி இதை ஆக்கியோர் என்னைக் கேட்டுக்கொண்டார். மிகுந்த மகிழ்ச்சியுடன் நான் இம் முகவுரையை எழுதுகிறேன். இக்கதை புராதனமானதென்று தமிழ்மக்க ளெல்லோரும் நன்கறிவர். இதன் முதனூல் புகழ்பெற்ற '**சிலப்பதிகாரம்**' ஆகும். 'கோவலன் கதை' என்றறிவோர் நூல் இடைக்காலத்திற் றோன்றிற்று. அஃது, புகழேந்திப் புலவரால் வரையப் பெற்றதெனக் கொள்ளப்படுகின்றது. தற்காலத்தில் இக்கதையைப் பலர் நாடக ரூபமாகவும் எழுதி வெளியிட்டுள்ளார். அவர்க ளொவ்வொருவரும் தத்தம் மனதுக் கேற்றபடி கதையைத் திரித்து வரைந்திருக்கின்றனர். '**கண்ணகி**,' '**சிலப்பதி காரக் கதை**' என்ற பெயர்களுடன் உரை நடையில் **சிலப் பதிகாரம்** சிலரால் எழுதி வெளியிடப்பட் டிருக்கின்றது. '**வீரபத்தினி**' என்ற இந்நூலும் **சிலப்பதிகாரத்தை** உரை நடையில் எழுதிய தொன்றேயாயினும் ஏனை உரைநடை நூல்களினிட இது அநேக விஷயங்களில் மேம்பாடுடையதா யிருக்கின்றது. '**வீரபத்தினி**' முற்றிலும் முதனூலைத்

தழுவியே எழுதப் பெற்றுள்ளது. இந்நூலாசிரியர் முதனூலின் சுவையை நன்கு அனுபவித்து, அதிலிருந்து அநேக அடிகளைச் சந்தர்ப்பத்துக் கேற்றவாறு ஆங்காங்கு எடுத்துப் புகுத்தி யிருக்கின்றார். இன்னொரு முக்கியமான விஷயத்தையுங் குறிக்க விரும்புகிறேன். முதனூலிற் சுட்டப்பட்டுள்ள கிளைக் கதைகள் இப்புத்தகத்தில் தெளிவாகவும், விரிவாகவும் வரையப்பட்டுள்ளன, ஆகலின், கோவலன்—கண்ணகி சரிதையைப்பற்றி வரையப்பட்டுள்ள புத்தகங்களிலெல்லாம் '**வீரபத்தினி**' சிறந்து விளங்குவதா யிருக்கின்றது. இதன் ஆசிரியர் **திரு. து. சுப்பையா பிள்ளை** யவர்கள் முதனூலை மிகவும் சாக்கிரதையாகப் படித்து ஆராய்ந்து, இப்புத்தகத்தை வரைந்திருக்கின்றாரென்று நம்புகிறேன். தெள்ளிய நடையில் அழகாக எழுதப்பெற்ற இந்நூலில் அரும்பதவுரையும், பெயர் விளக்கமும் தொகுத்துச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்புத்தகத்தை ஸ்கூல்களிலும், காலேஜ்களிலும் பாடமாக வைத்தால் நன்மை யுண்டாகுமென்று முழு நம்பிக்கையுடன் சிபார்சு செய்கிறேன்.

(ஒப்பம்) **எஸ். ஏ. விநாயகம் பிள்ளை**
தமிழ்ப் போதகாசிரியர்,
சிலோன் சர்வகலாசாலை.

கொழும்பு
17-ஏப்ரல்-1926.

# அபிப்பிராயங்கள்

---

## ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலம் அவர்கள்

*"ஞானசாகரம்"* 13-ம் பதுமம் 3, 4-ம் *இதழ்களில் எழுதியது.*

*இற்றைக்கு ஆயிரத்து எழுநூறு ஆண்டுகளுக்குமுன் காவிரிப்பூம் பட்டினத்தி லிருந்த கண்ணகி என்னுங் கற்பிற் சிறந்த மாதும், அவள்தன் காதற் கணவன் கோவலனும் அடைந்த துயர வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை, அக்காலத்தில் உடனிருந்து கண்டுங் கேட்டும் அறிந்த* **இளங்கோவடிகள்** *என்னும் முத்தமிழ்வல்ல சான்றோர், அவ்வரலாறுகளைச் செந்தமிழ் வளர்ந்தோங்கவும், அவைதம்மைப் பயில்வார் நெஞ்சங்கல்லாயிருப்பினும் அது நீராய்க் கரைந்து உருகவும்* **சிலப்பதிகாரம்** *என்னும் ஒப்புயர்வில்லாப் பெருங் காப்பியமாக அருளிச் செய்திருத்தலைத் தமிழ்வல்லார் அனைவரும் நன்கறிவர். அக்காப்பியம் தூய விழுமிய பழந் தமிழ்ச் செய்யுட்களால் ஆக்கப்பட்டிருத்தலால், தமிழ்வல்லாரன்றி ஏனையோர் அக்காப்பியக் கதையைக் கற்று இன்புறுதல் இயலாது. ஆகலின், அக்காப்பியத்தில் அக்கதை அமைக்கப்பட்டிருக்கும் அழகையுந் திறத்தையும் எல்லாரும் எளிதில் உணரும் பொருட்டுத் திருவாளர்* **து. சுப்பையா பிள்ளையவர்கள்** *அதனைத் தெள்ளிய தமிழுரை நடைப்படுத்தி "வீரபத்தினி" என்னும் பெயரால் ஆக்கியிருக்கிறார்கள். இவ்வுரை நூலின் இடையிடையே முதல் நூலாகிய சிலப்பதிகாரத்திலுள்ள சுவை பழுநிய செய்யுட்களும் வாய்ப்பாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இதனை ஆங்காங்கு உற்று நோக்க இதன் உரைநடை செவ்வையான தமிழில் அழகியதாக எழுதப்பட்டிருத்தல் கண்டு மிக மகிழ்ந்தேம். தமிழ் மாணவர்க்கும் பிறர்க்கும் இது பெரிதும் பயன்படுமென நம்புகின்றோம். இதன் ஈற்றில் அருஞ் சொற்களுக்குப் பொருள் விளக்கமும் சேர்க்கப்பட்டிருக்கின்றது.*

## செந்தமிழ்.

(தொகுதி. 24. பக்கம்—298)

### மதுரைத் தமிழ்ச் சங்கத்து வெளியீடு.

இது ஆலங்காடு ஸ்ரீமத். து. சுப்பையா பிள்ளை யவர்களாற் சிலப்பதிகாரத்தைத் தழுவிப் படிப்பவர் விரும்புறுமாறு இடையிடையே சிலப்பதிகாரச் செய்யுளடிகளையும் தொடர்புடையவாக மடுத்து கோவலன் வாழ்க்கை, வழிச் செலவு, மதுரைச் செய்தி, சேர நாட்டில் தெய்வமாதல் என்னும் பகுதிகளை யமைத்து நன்ற யெழுதப்பட்டிருக்கின்றது. இதன் முதலிற் புகார்ச் சிறப்பு என்னும் பகுதியில் புகார் நகரைப்பற்றி ஆங்காங்குச் சொல்லிய பல சிறந்த சிறப்புக்களும் ஒருங்கு விளங்கும்படி தொகுத்தெழுதி யிருப்பது பாராட்டத் தக்கது.

---

## நவசக்தி.

(1926. செப்டம்பர்—3உ.)

### திரு. வி. கல்யாணசுந்தர முதலியாரவர்கள்.

வீரபத்தினி என்னும் பெயர் வாய்ந்த தமிழ் நூல் எமது பார்வைக்கு வந்தது. அந்நூலாசிரியர் திருவாளர் து. சுப்பையா பிள்ளை அவர்கள். கற்புக்கடவுளொனுங் கண்ணகி வரலாறு பலரால் பலதிறமாக எழுதப்பட்டிருக்கிறது. அன்பர் சுப்பையாப் பிள்ளை அவர்கள் எழுதிய இந்நூல் எல்லாவற்றினுந் தலைசிறந்து விளங்கக்கண்டு மகிழ்வெய்தினேம். படிப்போருக்குக் கருத்து எளிதிற் புலனுமாறு ஆக்கியோன் கொண்ட நடையும், இடையிடையே பொருந்திய விடங்களில் மூலத்தினின்றும் எடுத்தாளப் பெற்றுள்ள பாக்களின் அமைவும், பிறவும் இந்நூலின் சிறப்புக்கள் என்று கூறலாம். முதலில் பொலியும் பெயர் விளக்கமும் முடிவில் ஒளிரும் அரும்பொருள் விளக்கமும் படிப்போர்க்குப் பயனளிப்பனவாம். சிலப்பதிகாரம் பயில்வோர்க்கு இந்நூல் பேருதவி புரியுமென்பதில் எட்டுணையும் ஐயமில்லை. இந்நூல் ஒவ்வொரு கல்லூரியிலும் பாடபுத்தகமாதல் எமது வேட்கை.

## செந்தமிழ்ச் செல்வி.

சிலம்பு—4 பரல்—6.

(சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வெளியீடு)

கண்ணகி சரித்திரம், சிலப்பதிகாரக் கதை எனப் பல நூல்கள் வெளி வந்திருப்பினும், சிலப்பதிகாரம் தமிழ்ப் பெருங் காப்பிய மாதலால் பல அறிஞர் வழியாக அதுவே திரும்பத் திரும்பப் பல முறைகளில் எழுதப்பெற்று வெளி வருவது போற்றற் பாலதே யாகும். இக்கதை பல தலைப்புக்களை யுடையதாயும் ஆங்காங்கே சிலப்பதிகாரத்தி லிருந் தெடுத்த, இனிமையாகவும் எடுத்துக்காட்டாகவு முள்ள பல அடிகளை யுடையதாயும், கற்றார் கல்லாதா ரிருவரும் எளிதிற் கற்றுங் கேட்டுந் தெரியத்தக்க தெள்ளத் தெளிந்த நடையில் எழுதப் பெற்றிருப்பது பெரிதும் பாராட்டற் பாலது.

இதனைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் வாங்குவ தாயின் அதுவே ஆசிரியரை ஊக்கி இதுபோன்ற பல அரி உரைநடை நூல்களை எழுதுமாறு தூண்டுவதாகும்.

---

## சுதேச மித்திரன்.

(10—7—1926.)

"வீரபத்தினி" ......இளங்கோவடிகளின் சிலப்பதி காரமான முதனூலைப் பின்பற்றி, கண்ணகிக்கு வீரபத்தினி எனும் பெயர் கொடுத்து வசன நடையில்......எழுதப்பெற் றது......ஆங்காங்கே வசன நடைக்கு இடையில் சிலப்பதி காரத்தினின்றும் அடிகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப் புத்தகம் நடுத்தரப் பள்ளிக்கூடங்களில் மேல் வகுப்புகளுக்கு ஆழ்ந்த படிப்புக்கும் கல்லூரிகளில் சாதாரணப் படிப்புக்கும் தகுதியானது.

## குமரன்—வாரப்பதிப்பு.

(8—7—26.)

இந்நூல் கற்புக்கரசி கண்ணகியின் திருக் கதையாகும். இக் கண்ணகியார் சோழநாட்டில் சீரும் சிறப்பும் வாய்ந்த காவிரிப்பூம் பட்டினத்தின்கண் அவதரித்தவர். அந்நகர மாசாத்துவான் தன் அருமைச் செல்வன் கோவலனை மணந்து, பழவினையால் மதுரைமா நகரில் கணவனை யிழந்து பாண்டியன் பதியை எரித்த பத்தினிக்கடவுள். இவர் தம் சரிதையை, புலவர் திலகமும் கவிஞர் பேரரசுமான இளங் கோவடிகள் செய்யுள் வடிவமாக்கி நெஞ்சையள்ளும் சிலம் பாக இசைத்தருளினார். இக்காப்பியத்தினைத் தழுவி இவ் வசன நூல் எழுதப்பட்டுளது. இந்நூலில் இடையிடையே சிலப்பதிகாரத்தினின்றும் பல இனிமையான அடிகள் எடுத் தாளப்படுகின்றன. இது அரும்பொருள் விளக்கத்துடன் அமைந்து விளங்குகின்றது. இச் சிறு நூல் தெள்ளத் தெளிந்து தித்திக்கும நடையில் மாணக்கர் மாணக்கியர்கள் எளிதிற் கற்றறியும் வண்ணம் அழகாக இயற்றப்பட் டிருக் கின்றது.

---

## தேசபக்தன்.

(கொழும்பு.)

திருவாளர் து. சுப்பையாபிள்ளை அவர்களால் எழுதப் பெற்ற "வீரபத்தினி" என்னும் சிறந்த புத்தகத்தைப் படிக்கும் பேறு நமக்குக் கிடைத்தது. பெரும் புலவர் "இளங்கோவடிகளால்" தேனினும், பாகினும் இனிக்கும் மதுரமொழிகளை அடுக்கிப் பாடி யருளப்பட்ட பஞ்ச காவி யங்களி லொன்றான சிலப்பதிகாரம் என்ற சிறந்த நூலின் வசனமே வீரபத்தினி. பல ரஸங்களும் ஊற்றெடுத்தோடும்

சிலப்பதிகாரக் கதையை வசன நடையில் பலர் வரைந்துள்ளார். அவற்றிலெல்லாம் அன்பர் சுப்பையா பிள்ளை யவர்களது

வுடன் கூறுகின்றோம். கேவலம் கதையை மட்டும் எடுத்துக் கூறவேண்டுமென்ற நோக்குடன் 'வீரபத்தினி' எழுதப்படவில்லை. முதனூலான சிலப்பதிகாரத்தைக் கற்று அதன் தெவிட்டாத உருசியை யனுபவிக்கும் பெரும்பேறு பெறாத தமிழ் மக்களுக்கும் அவ்வின்பத்தை உள்ளபடி ஊட்ட வேண்டுமென்ற பெரு நோக்குடன் 'வீரபத்தினி' வரையப்பட் டிருக்கின்றதெனக் கருதுகிறோம். முற்றிலும் முதனூலைத் தழுவியே வரையப்பட் டிருக்கின்றது. 'சிலப்பதிகாரத்' திலிருந்தெடுத்த, இனிமையாகவும், எடுத்துக் காட்டாகவும் உள்ள பல அடிகள் ஆங்காங்கே சேர்க்கப்பட் டிருக்கின்றன. இன்னணம் சேர்க்கப்பட்டுள்ள அடிகளைப் பொறுக்கி எடுத்திருப்பதில் ஆக்கியோர் காட்டி யிருக்கும் திறன் மெச்சத் தக்கது. இனிய தமிழின் சுவையை யெல்லாம் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் சுவைப் பொக்கிஷமான சிலப்பதிகாரத்தை எத்துணை ஆர்வத்துடன், திரு சுப்பையா பிள்ளை அவர்கள் கற்று அனுபவித்துள்ளா ரென்பதை எடுத்துக் காட்டாகச் சேர்க்கப்பட்டுள்ள அடிகள் தெற்றென விளக்கா நிற்கின்றன. 'சிலப்பதிகாரத்' தில் குறிக்கப்பட்டுள்ள கிளைக்கதைகளை யெல்லாம் 'வீரபத்தினி' யில் விளக்கி வரையப்பட் டிருப்பதையும் ஞாபகப்படுத்த விரும்புகிறோம். நாடகக்காரர்களாலும் தக்க தமிழறிவற்ற சிலராலும் உயரிய சிலப்பதிகாரத்தை மிகச் சீர்கேடாகத் திரித்து வரையப்பட் டிருப்பதை நினைக்கும்போது நம்மனம் உண்மையில் மிகவும் வருந்துகின்றது. தமிழகத்தின் பண்டைச் சிறப்பையும் நம் மூதாதையரின் மேன்மையான நாகரிகத்தையும் பழக்க வழக்கங்களையும் இல்லறத்தின் மாண்பையும் தமிழ் நாட்டுப்

பெண்களுடைய கற்பின் திட்பத்தையும் தமிழ் நாடு அக் காலத்தில் இராஜீய பொருளாதார சமூக விஷயங்களிலும் கைத்தொழில் வியாபாரம் முதலிய துறைகளிலும் எவ்வளவு மேம்பட்டு விளங்கிய தென்பதையும் உலகத்தாருக் கெடுத்து அறிவுறுத்திக் கொண்டிருக்கும் சிலப்பதிகாரத்தைத் திரித்துக் கூறி அழகைக் குலைத்து அலங்கோலப் படுத்துவது ஒரு பாவச் செயலென்று சொன்னாலும் மிகையாகாது. சரித்திர ஆராய்ச்சிக்கு ஒரு சிறந்த சாதனமாகத் திகழும் இந்நூலை அழகுபெற வசனத்தில் வரைவோர் தமிழ் மக்களுக்கு ஒரு ஒப்பற்ற கைங்கரியஞ் செய்தவர்களாவர் என்பது எமது துணிபு. படித்தவரும் பாமரரும் எளிதி லறியக்கூடிய ஆற்றொழுக்குப் போன்ற தெள்ளிய நடையில் (திசைச்சொற்களும் திரிபுகளும் கலக்கப் பெறாமல்) 'வீரபத்தினி' வரையப்பட்டிருப்பதைக் குறிக்க விரும்புகிறோம்.

---

## தமிழ் நாடு.

## (28—11—26.)

ஐம்பெருங் காப்பியங்களுள் முதன்மையானதும் தமிழ் மக்களால் அதிகமாகப் போற்றப்படுவதும் சிலப்பதிகாரமே யாகும். சிலப்பதிகாரத்தின் சிறப்பை "நெஞ்சை அள்ளுஞ் சிலப்பதிகாரம்!" என்ற பகழ் மொழியில் பாரதியார் விளக்கியிருக்கின்றார். கண்ணகியின் கதை பலரும் அறிந்தது. எவர் மனத்தையும் கவரவல்லது. கதை நிகழ்ச்சிகளும் கதை நடையும் படிப்பவர் மனத்தை ஒருங்கே ஈர்க்க வல்லன. ஏட்டில் கிடந்து மக்கிப்போக இருந்த காப்பியம் மகா மகோபாத்தியாய **உ. வே. சுவாமிநாதய்யரவர்கள்** நன் முயற்சியால் வெளியாயது. பின்னர் அறிஞர் பலரும் அக் காப்பியத்தை ஒட்டி உரை நடையில் கதை வரையலாயினர். இம் முறையில் வெளியிடப்பட்ட நூல்களில் "வீரபத்தினி"

யும் ஒன்று. ஸ்ரீமான். பிள்ளையவர்கள் கதையை அதிகமாக வளர்க்காமலும் அதிகமாகச் சுருக்காமலும் காப்பியத்தி லுள்ள கிளைக்கதைகளைச் சற்று விரித்தும் எழுதி யிருப்பது போற்றத் தக்கது. பிள்ளையவர்கள் தமிழ் நடை குற்ற மற்றது. பள்ளிச் சிறுவர்களுக்கும் தமிழ் கற்க விரும்பும் மாணுக்கர்களுக்கும் சிலப்பதிகாரத்தின் பெருமையை விளக்கிக் காட்ட இத்தகைய நூல்களே வேண்டும்.

## தமிழன்.
## (8—12—26.)

வீரபத்தினி என்னும் பெயரிய இந்நூலினை வரப்பெற்றோம். பண்டு தொட்டுத் தமிழ் முதுமக்களால் 'பத்தினிக் கடவுள்' எனப் போற்றி வரும் கண்ணகியின் காதையை இந்நூலின்கண் நன்கு விளக்கப்பட் டிருக்கின்றது. தமிழ் வளம் குறுகிநிற்கு மிக்காலத்தில் பஞ்சகாவியங்களிலொன்றாகிய சிலப்பதிகாரம் எனும் சீரிய நூலையும் அதன் உரையையும் துருவிக்காணும் ஆற்ற லற்றவராய்ச் சலிப்புற்றுச் சோர்ந்து நிற்கும் தமிழிளஞ் செல்வர்களுக்கு இந் நூல் பற்றுக்கோடாய் நின்று பேருதக்கத்தை விளைக்குமென்று யாம் துணிவுறுகின்றோம். ஆகலின் தமிழராயினார் ஒவ்வொருவரும் இந்நூலை வாசித்துணர்தல் மிகுதியும் விரும்பத் தககதாம. தமிழ் நாட்டுப் பண்டுலக நிலையை யறிதற்கவாவுறும் சரித்திராசிரியர்க்கும் இந்நூல் பயன் தரத்தக்க தொன்றாம்.

---

பசுமலை அமெரிக்கன் மிஷன்

ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிட்

ஸ்ரீமாந். ந. ரா. சுப்பிரமணிய சர்மா அவர்கள் எழுதியது

தாங்கள் அதிக ஆராய்ச்சியுடன் பிரயாசை யெடுத்து நன்கு யெழுதி யிருக்கிறீர்கள்......இத்தகைய புஸ்தகம் முன்னர் இல்லை.

கரந்தட்டான்குடி

திருவாளர், த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள், பி. ஏ., பி. எல். எழுதியது

தங்கள் புத்தகத்தைப் படித்தேன். ஐஸ்கூல் வகுப்புகளுக்கு மிகவும் பயன்படக் கூடியது......

கரந்தட்டான்குடி

திருவாளர், ஐ. குமாரசாமி பிள்ளை யவர்கள், பி. ஏ., எழுதியது.

The book is well written in chaste tamil and may be prescribed as a text book for High Schools.

மைலாப்பூர், பி. எஸ். ஹைஸ்கூல் சீனியர் தமிழ்ப் பண்டிட்

ஸ்ரீமான். V. துரைசாமி ஐயர் அவர்கள் எழுதியது.

ஆலங்காடு ஸ்ரீமான். பண்டித அ. சுப்பையா பிள்ளையவர்கள் சிலப்பதிகாரக் கதையைத் தழுவி எழுதிய "வீர பத்தினி" என்னும் உரைநூல் ஒன்று வரப்பெற்று மகிழ்ந்

உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுளாக இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகார நூலின் அடிகளை இடையிடையே மடுத்து எழுதிய இந்நூல் மாணவ மாணவியர்க்குத் தக்க தாகும். தமிழ் நாட்டில் கண்ணகி போன்ற கற்புடைத் தெய்வங்களை நாம் போற்றல் இன்றி யமையாத தாகும். இளைஞர், இத்தகைய வீரபத்தினிகளின் செயற்கரிய செய்கைகளைக் கூறும் உரை நூல்களைப் படித்து, பண்டைத் தமிழ்த் தாயின் பெருமை நற்குணம் முதலிய வற்றை நன்கு உணர்ந்து இன்புறுவாராக.

இவ்வுரை நூலைக் கற்கும் மாணவர்க்கு, முதனூலைப் படித்து இன்புறுவதில் ஊக்கம் உண்டாதல் திண்ணம்.

இனிமையும் தெளிவும் வாய்ப்ப ஸ்ரீமான் பிள்ளையவர்கள் இத்தகைய நூல்கள பலவற்றை எழுதி, தமிழறிஞர்க்கு இன்பம் ஊட்டுவாராக.

"ஏல விவசாயி" பத்திரிகாசிரியர், தேவாரம்

## ஸ்ரீமாந். R. நாராயணசாமி அவர்கள் எழுதியது.

பிரியமுள்ள ஐயா!

ஒரு பத்திரிகாலயத்தி லிருந்து தங்கள் அருமை 'வீரபத்தினி' என்னும் புஸ்தகத்தை வீட்டிற்கு எடுத்து வந்தேன். நான் நோய் வாய்ப்பட்டுத் தற்சமயம் படுக்கையி லிருக்கினும் கையிலெடுத்த தங்கள் நூலைப் படித்து முடித்து விட்டுத் தான் உறங்கினேன். தங்கள் நடையும் கதையின் விஷயமும் என்னைச் சில தடவை கண்ணீர் விடும்படி செய்தது; ரத்தம் கொதிக்கும்படி செய்தது; பண்டைத் தமிழ் நாட்டு வீரத் தாய்மார்களை ஆழ்ந்து ஆழ்ந்து எண்ணும்படி செய்தது. அதிகஞ் சொல்லுதல் முகஸ்துதி செய்ததாகும். தங்கள் அரியநூல் எப். ஏ கிளாஸ் மாணவர்கட்குப் பாடமாக ஏற்படுத்தப் பட்டால் மிக்க நன்று யிருக்கும்.

# பெயர் விளக்கம்.

கோவலன் :—காவிரிப்பூம் பட்டினத்துப் பிறந்த வணிகன்; சிலம்பு காரணமாக மதுரையில் வெட்டுண்டு வானகஞ் சேர்ந்தவன் ; கதைத்தலைவன்.

கண்ணகி (வீரபத்தினி) :—கோவலன் மனைவி ; காவிரிப்பூம் பட்டினத்துப் பிறந்து தனது வீரக்கற்பினால் மதுரை நகரைத் தழற்படச் செய்து, சேரநாட்டில் தெய்வமானவள் ; கதைத்தலைவி.

மாசாத்துவான் :—கோவலன் தந்தை ; காவிரிப்பூம் பட்டினத்துப் பெருஞ் செல்வன் ; மதுரையில் மகன் மாண்டதறிந்து தன் செல்வங்களைப் பலர்க்கும் அள்ளி வழங்கிவிட்டுப் புத்தமதத் துறவியானவன்.

பெருமனைக்கிழத்தி :—கோவலன் தாய் ; மகன் மதுரையில் மாண்டதற்காற்றாமல் ஏங்கி உயிர்விட்டுப் பின்பு சேரநாட்டில் அரட்டன் செட்டியின் இரட்டைப் பெண்களிலொருத்தியாய்க் கண்ணகியின் தாயுடன் மறுபிறப்புற்றவள்.

மாநாய்கன் :—கண்ணகியின் தந்தை ; மருமகன் மடிந்தமை கேட்டுச் செல்வங்களைப் பலர்க்கும் வழங்கிவிட்டுச் சமணத் துறவியானவன்.

மா —காவிரிப்பூம் பட்டினத்தாள் ; சித்திராபதியின் மகள் ; நாடகக் கணிகை ; கோவலனின் காதற் பரத்தை ; கோவலன் மதுரையில் மாண்டதறிந்து மனம் வெறுத்துப் புத்தமதப் பிட்சுணியானவள் ; தன் மகள் மணிமேகலையையும் பிட்சுணி ஆக்கினவள்.

வசந்தமாலை :—மாதவியின் தோழி, இவளைக் கூனி என்றுங் கூறுப.

தேவந்தி :—பாசண்டச் சாத்தன் மனைவி ; கண்ணகியின் பார்ப்பனத்தோழி ; கண்ணகிக்கு மதுரையில் நேர்ந்த பெருந்துயர்கேட்டு அவளைத் தேடிச்சென்று திருச்செங்கோட்டை யடைந்து கண்ணகி கோயிலிற் பூசை செய்திருந்தவள்.

)வர், முதிர்ந்த தவமுடையவர் ; கண்ணகிக்கும் கோவலனுக்கும் வழித்துணையாகி, மதுரை சென்று ஆங்கு இருவருக்கும் நேர்ந்த தீமைகேட்டு, பட்டினி விரதத்தால் உயிர் துறந்தவர்; மதுரைசெல்லும்வழியில் வம்பப்பரத்தையையும் வறுமொழியாளனையும் நரியாகச் சபித்தவர்.

சாரணர் :—சிரங்கத்தில் தோன்றி கண்ணகி கோவலனொடு சென்ற கவுந்தி அடிகளுக்கு அறமுரைத்தவர்.

மாங்காட்டு மறையோன் :—இவர் கண்ணகி முதலாயினர் செல்கையில் எதிர்ப்பட்டு வழித்திற முரைத்தவர்.

கௌசிகன் :—மாதவியின் ஓலை கொண்டு சென்று கோவலனைக் காட்டிற் கண்டு மறு மொழி பெற்றுச் சென்றவன்.

மாடலமறையோன் :—இவர், மதுரையில் கவுந்தியடிகளிருந்த அறப்பள்ளியிற் கோவலனைக்கண்டு அவனது , புகழ்ச்செயலை விளம்பினவர் ; கோவலன் மடிந்ததுவும் மதுரைச் செய்தியும் காவிரிப்பூம் பட்டினத்தில் வெளியிட்டவர் ; சேரன் செங்குட்டுவனைக் கங்கைக் கரையிற் சந்தித்துக் கோவலனதியர் வரலாறு கிளந்தவர் ; வஞ்சியில் செங்குட்டுவனை யாகம் புரியச் செய்தவர் ; திருச்செங்கோட்டில் தேவந்தி முதலாயினர் வரலாறு தெரியச் செய்தவர்.

மாதரி :—மதுரையில் இடையர் குலத்தினள்; கவுந்தியடிகளால் கண்ணகியையும் கோவலனையும் அடைக்கலமாகக் கொடுக்கப் பெற்றவள்; அவ்விருவருக்கும் நேர்ந்த பொல்லாங்கைப் பொறுக்கலாற்றாது தீக்குதித்து மடிந்து, பின்னர்த் திருவநந்தபுரத்தில் சேடக் குடும்பியின் மகளாய்ப் பிறந்தவள்.

ஐயை :—மாதரி மகள்; தேவந்தி முதலாயினருடன் கண்ணகியைத்தேடி திருச்செங்கோட்டை யடைந்தவள்.

பொற்கொல்லன் :—மதுரையில் கோவலனைக் கள்வனென்று பாண்டியனிடம் வஞ்சகமாகக்கூறிக் கொல்வித்தவன்; அரண்மனைத் தட்டான்.

நெடுஞ்செழியன் :—பாண்டிய மன்னன்; பொற்கொல்லனின் வஞ்சக மொழியால் தடுமாற்ற மடைந்து கோவலனைக் கொல்லுமாறு காவலர்க்கு ஆணை கொடுத்தவன்; பின்பு, கண்ணகி யுரைத்த வழக்கால் உண்மை யுணர்ந்து நெறிமுறை தவறினேனே யென்றேங்கி உயிர் நீங்கினவன்.

கோப்பெருந்தேவி :—பாண்டியன் நெடுஞ்செழியனின் மனைவி கணவன் கண்ணகி வழக்கால் அரியணையினின்றும் விழுந்து மாண்டதைப் பொறாமல் உடன் வீழ்ந்து மாய்ந்த அறக்கற்பினள்.

செங்குட்டுவன் :—சேரவேந்தன்; கண்ணகி திருச்செங்கோட்டில் வந்து விட்புலஞ் சென்றாளென்பதைக் குறவர்களால் அறிந்து, இமயமலையினின்றும் கண்ணகி சிலையைச் செய்துவந்து நாட்டிக் கோயில் கண்டவன்; கனகவிசயர் ஆகிய ஆரிய மன்னரைப்போரில் வலியடக்கிச் சிறைபிடித்தவன்; மாடலமறையோன் வழுத்திய வண்ணம் இராசசூய யாகஞ் செய்தவன்.

**வேண்மாள் :**—செங்குட்டுவ வேந்தனின் மனைவி; கண்ணகியைச் சேரநாட்டில் நாட்டிச் சிறப்புச் செய்யவேண்டுமென்று நாயகனுக்குக் கூறினவள்.

**சாத்தனார் :**—மதுரையில் தானிய வாணிகஞ் செய்தவர்; சேரன் செங்குட்டுவனுக்குக் கண்ணகி கோவலன் முதலாயினார் வரலாற்றை விளக்கினவர்; இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரத்தைக் கேட்டவர்; அதன் தொடர்பாகிய மணிமேகலை என்னுஞ் சிறந்த காப்பியத்தைப் பாடினவர்; கடைச்சங்கப் புலவருள் ஒருவர்; சீத்தலைச் சாத்தனார் என்றும் கூலவாணிகன் சாத்தனார் என்றும் அவரைக் கூறுப.

**இளங்கோவடிகள் :**—சேரன் செங்குட்டுவனின் தம்பி; இளமையிலேயே துறவு பூண்டவர்; கோவலன் கண்ணகி கதையாகிய சிலப்பதிகாரத்தைக் கனியினுங் கட்டிபட்ட கரும்பினும் இனிக்கும் வண்ணம் பாடியருளினவர்; கூலவாணிகன் சாத்தனார் பாடிய மணிமேகலையைக் கேட்டவர்.

# பொருளடக்கம்

## புகார்ச் சிறப்பு.


க. அகநகர் புறநகர் ... ... 1
உ. நாளங்காடிப்பூதம் ... ... 3
ந. கொற்றப்பந்தர், பட்டி மண்டபம், தோரண வாயில் ... ... 4
ச. வெள்ளிடை மன்றம் ... ... 5
ரு. இலஞ்சிமன்றம் ... ... 5
சா. நெடுங்கல் நின்றமன்றம் ... ... 5
எ. பூதசதுக்கம் ... ... 6
அ. பாவைமன்றம் ... ... 7
கூ. சக்கரவாளக்கோட்டம் ... ... 7
கo. வனங்கள் ... ... 9
கக. பத்தினிப்பெண்டிர் ... ... 10


## கோவலன் வாழ்க்கை.


க. திருமணம் ... ... 17
உ. இன்பந்துய்த்தல் ... ... 18
ந. தனிமனைப்புகுதல் ... ... 18
ச. மாதவி நடனம் ... ... 19
ரு. மாதவி நட்பு ... ... 20
சா. கண்ணகியின் பிரிவாற்றுமை ... ... 21
எ. இந்திர விழா ... ... 22
அ. கோவலன் மாதவியைப் பிரிதல் ... 24
கூ. தேவந்தி வரலாறு ... ... 26
கo. கண்ணகி கனு ... ... 28
கக. கோவலன் வருகை ... ... 30

## வழிச் செலவு.


| | | | | |
|---|---|---|---|---|
| க. | புறப்பாடு | ... | ... | 33 |
| உ. | கவுந்தியடிகளைக் கண்டடிபணிதல் | | ... | 34 |
| ங. | மருதநிலக் காட்சி | ... | ... | 36 |
| ச. | சாரணர் எதிர்ப்படல் | ... | ... | 38 |
| ரு. | வம்பப்பரத்தையும் வறுமொழியாளனும் நரியாயினமை | ... | ... | 40 |
| சா. | மாங்காட்டு மறையோன் வழித்திறங்கூறல் | | | 41 |
| எ. | வனதெய்வம் | ... | ... | 47 |
| அ. | ஐயை கோட்டம் | ... | ... | 48 |
| கூ. | மாதவி ஏவிய கோசிகற் காண்டல் | | ... | 52 |
| கo. | வையை கடந்து மதிற்புறஞ் சார்தல் | | ... | 56 |


## மதுரைச் செய்தி.


| | | | | |
|---|---|---|---|---|
| க. | நகரக்காட்சி | ... | ... | 58 |
| உ. | கோவலன் நகர்கண்டு மீளல் | ... | ... | 59 |
| ங. | கோவலன் கனு | ... | ... | 65 |
| ச. | அடைக்கலம் அருளல் | ... | ... | 65 |
| ரு. | குரங்குக்கை வானவன் | ... | ... | 67 |
| சா. | மாதரி மனை | ... | ... | 69 |
| எ. | சிலம்பு விலைபகர்தல் | ... | ... | 72 |
| அ. | அரசன் ஆணை | ... | ... | 74 |
| கூ. | களவுத்திறன் | ... | ... | 75 |
| கo. | கோவலன் இறுதி | ... | ... | 79 |
| கக. | ஆய்ச்சியர் ஆட்டம் | ... | ... | 79 |
| கஉ. | கொடுந்துயர் பூண்டாள் கோவலற் காண்டல் | | ... | 83 |
| கங. | வழக்குரைத்தல் | ... | ... | 87 |
| கச. | வீரமொழி | ... | ... | 91 |
| கரு. | மதுரை தீப்படல் | ... | ... | 93 |
| கசா. | மதுராபுரித் தெய்வம் வரன்முறை கிளத்தல் | | ... | 95 |
| கஎ. | வீரபத்தினி மேற்றிசைப் போதல் | | ... | 100 |

## சேரநாட்டில் தெய்வமாதல்.

க. காதற் கொழுநனைக் கண்டு விண்ணடைதல் ... 101
உ. குறவர் கூத்து ... ... 102
ங. சேரன் மலைவளங் காணச்சேறல் ... 104
ச. குன்றவர் கூற்று ... ... 105
ரு. சாத்தனார் கண்ணகி வரன்முறை சாற்றல் ... 107
சா. கல்லுரு நாட்டக்கருதி யாராய்தல் ... 109
எ. படை எழுச்சி ... ... 111
அ. நீலகிரி ... ... 114
கூ. ஆரியமன்னரை அமரில் வெல்லல் ... 115
க0. கங்கை நீர்ப்படை ... ... 117
கக. சேரன்பால் மாடலன் சென்றுரையாடல் ... 118
கஉ. வஞ்சிமாநகர்க்கு வந்துசேரல் ... ... 120
கங. பத்தினிக் கல்நாட்டு ... ... 121
கச. வீரபத்தினியார் விண்ணிடைத் தோன்றல் ... 124
கரு. தேவந்திமங்கை தெய்வமுற்றுரைத்தல் ... 126
கசா. மூவர்பெண்களின் முன்னைப் பிறப்பு ... 128
கஎ. வரம் தரல் ... ... 130
கஅ. பத்தினித் தெய்வம் இளங்கோவடிகட்கு அருளல் 130
ககூ. பத்தினிகோயிற் கண்டவர் ... ... 131
உ0. இளங்கோவடிகள் திருவாக்கு ... ... 132
அரும்பொருள் விளக்கம் ... ... 133

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | |
|---|---|---|---|
| 1 | 12 | நாமமடைந்தை | நாமடைந்தை |
| 2 | 11 | பலவும | பலவும் |
| 13 | 1 | பெருமாள் | பெருமான் |
| | 11 | வழிப்பாட்டையும் | வழிபாட்டையும் |
| 19 | 27 | பாடல | பாடல் |
| 25 | 2 | பாடினான் | பாடினாள் |
| 56 | 23 | பனைநிலை | பணைநிலை |
| 64 | 14 | நாகன் | நரகன் |
| 66 | 17 | செங்கயல | செங்கயல் |
| 69 | 10 | சிறியதாயினும் | சிறிதாயினும் |
| 93 | 4 | மருகிற் சென்று | மருகிற் சென்று |
| 100 | 2 | இவன் | இலன் |
| 126 | 20 | எதிலார் | ஏதிலார் |
| 129 | 20 | தொன்றியில் | தொன்றியல் |

கடவுள் துணை

# வீரபத்தினி

## (கோவலன் கதை)

காப்பு.

கரும்பும் இளநீரும் கட்டிக் கனியும்
விரும்பும் விநாயகனை வேண்டி—அரும்பவிழ்தார்ச்
சேரமான் செய்த சிலப்பதிகா ரக்கதையைச்
சாரமாய் நாவே தரி.

## புகார்ச் சிறப்பு.

—oo✽oo—

அகநகர், புறநகர்.

நீர்வளமும் நிலவளமும் மிகுந்து பூமடந்தையின் புணைகலமாகவும் நாமடந்தையின் நல் இடமாகவும் செல்வமும் சீரும் சிறந்து விளங்கும் சோழ நாட்டில், காவிரியாறு கடலொடு கலக்கும் சங்கமுகத் துறையையும்,

ஆசுத் துகிரும் ஆரமும் அகிலும்
மாசறு முத்தும் மணியும் பொன்னும்
அருங்கல வெறுக்கையோ டளந்துகடை யறியா
வளந்தலை மயங்கிய

மாட மாளிகைகள் வனப்பொடு மயங்கும் அகலமான வீதிகளையும், பட்டாலும் எலிமயிராலும் பருத்திப்பஞ்சினாலும் அரிய நுண்ணிய சித்திரவேலைகள் மலிந்த நெய்தற் றொழிலாளர், செம்பு செய்குநர், மரங்கொல் தச்சர், கருங்கைக் கொல்லர், பொன்செய் கொல்லர், ஓவியம் எழுதுவோர், ஆயுள் வேதர், காலக்கணிதர், முத்துக்கோப்பார், சங்கறுப்பார் உள்ளிட்ட பல சிறந்த இன்றியமையாத தொழிலாளர்களின் இருக்கைகளையும், வெயிலெறி மணியும், நிலவெறி முத்தும், மின்னிடுபொன்னும், பட்டும் பவளமும், பல்வகை மணங்களும், உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையா உணவுப் பண்டங்கள் பலவும் பிறபொருள்களும் கொண்டுவிற்கும் கடை வரிசைகளையும், கடலோடிகளையும், பிறதேச வாசிகளையும், அகநகரிலும் புறநகரிலும் நிறையக் கொண்டிலங்குவது **பூம்புகார்** நகரம். இந்நகரத்திற்கு **புகார், காகந்தி, காவிரிப் பூம்பட்டினம், பட்டினம்** என்னும் பெயர்களும் உண்டு.

இந்நகரத்து அகநகருக்குப் **பட்டினப்பாக்கம்** எனவும் புறநகருக்கு **மருவூர்ப்பாக்கம்** எனவும் பெயர். அவ்விரு பாக்கத்துக்கும் இடையே நிரை நிரையாகத் தழைத்து நிற்கும் மரங்களையே கால்களாகக் கொண்டு கட்டிய கடைத்தொகுதிகள் நிறைந்த இடமொன்றுண்டு. அவ்விடத்திற்கு **நாளங்காடி** என்று பெயர். நிலமகளின் அணிமுடியில் அமைந்த நடுநாயக மணிபோல் மிளிர்வது, புகார் நடுவிற் சமைந்த நாளங்காடி. இங்கே பண்டங்களைக்கொள்ளல் கொடுத்தலிலுண்டாம் ஓசை எந்நேரமும் கடலொலியைக் கடவா நிற்கும். இதில் நாளங்காடிப் பூதத்தின் பீடிகையும், முத்துப் பந்தர் பட்டிமண்டபம் தோரணவாயில் ஆகிய அழகொழுகு காட்சி நிலயங்களும், ஐவகை மன்றமும், பல கோயில்களும், பள்ளிகளும் பொலிந்திருந்தன.

அவற்றுள் நாளங்காடிப் பூதத்தின் வரலாறு வருமாறு : இந்திரன் ஒரு காலத்தில் தனது நகரமாகிய **அமராவதியைத்** தவிர்க்கலாகாததொரு காரியப்பொருட்டுச் சிலநாள் பிரிவான் ஆயினன். அந்நாள் அவன் அமராவதியைக் காவல்புரிவார் யாருளர் என எண்ணினன். கதிரவன் குலத்துப் பிறந்த **முசுகுந்தச் சக்கரவர்த்தி** அஃதுணர்ந்து தானே காவல்புரிவதாக முன்வந்தான். அதுகேட்ட வானவர் கோமான் ஒரு **பூதத்தை** முசுகுந்தனுக்குத் துணையாக விட்டு நீங்கினன். அஞ்ஞான்று மன்னர் பெருமானாகிய முசுகுந்தனோடு **அவுணர்கள்** மாறிட்டு மலைவாராயினர். முதலில் அவற்கு ஆற்றாது தோற்றோடிய கொடிய அவுணர்கள், பின்னுஞ் சூழ்ந்து வஞ்சக இருளம்பொன்று விட்டனர். அந்த அம்பினின்றும் வெளிப்பட்டு நிறைந்த இருள் கண்ணொடு மனத்தையு மறைத்தமையின், அறிவும் மங்கிப் போரொழிந்து நின்றான் முசுகுந்தன். அக்காலை, வாசவனால் துணையாக விடப்பட்ட பூதம், ஓர் மந்திரத்தை அவன் செவியறிவுறுத்தது. அவ்வளவில், அவுணரது வஞ்ச அம்பின் இருள் உடைந்தொழியவே, மன்னர்பிரான் அவுணக்கொடியரைக் கொன்று குவித்து வென்றி கொண்டனன். இவற்றை அறிந்த வானவர் கோமான், என்றும் முசுகுந்தற்குக் காவலாகவென அப்பூதத்தை ஏவினன். அஞ்ஞான்று அவனால் நாளங்காடியில் கொடுவந்து நிறுவப்பெற்று, என்றென்றுஞ் சோழ மன்னர்கட்கு உறுதுணையாய் நின்று பாதுகாத்து வந்தது அப்பூதம். நாளங்காடியில் நிறுவப்பெற்றமையால் **நாளங்காடிப்பூதம்** என அதன்பெயர் வழங்கலாயிற்று.

**நாளங்காடிப் பூதம்**

மற்று, போரென்ன வீங்கும் பொருப்பன்ன திண்புயத்துக் **கரிகாற்பெருவளவன்** தமிழ்நாட்டில் தன்னோடு

கோற்றப்பந்தர்,
பட்டிமண்டபம்,
தோரணவாயில்

எதிர்த்துப் போரியற்று மன்ன ரின்மையின், வடதிசையிற் பகைப்போரைப் பெறலாமென்னும் கருத்தை உட்கொண்டு, நன்னாளில் வாளுங் குடையும் முரசமும் வெளியேற்றி,

நண்ணார்ப் பெறுகவிம்
மண்ணக மருங்கிலென் வலிகெழு தோளென

வேண்டி, வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து, நாற்படையும் புடைசூழ வடதிசைப் போயினன். இமையவருறையும் **இமயம்** வரைச் சென்றும் பகைவரைப் பெறாது மாறித் திரும்புஞ் செம்பியன், அப்பாற் செல்ல வழிவிடாது எதிர்ந்து நின்ற இமயத்தின் பிடர்மீது தனது **புலிமுத்திரையைப்** பொறித்து மீண்டான். மீண்டு வருங்கால், பகையின்றித் திறையாக **வச்சிரநாட்டு வேந்தன்** ஒரு **முத்துப்பந்தர்** தந்தனன்; **மகதநாட்டு மன்னன்** பகைத்துப் போராற்ற வியலாது ஒரு **பட்டிமண்டபத்தை** நல்கினன்; **அவந்தியரசன்** நட்புக் கொண்டு உயர்ந்த வேலைப்பாடுகளமைந்த **வாயிற்றோரண**மொன்று ஈந்தனன். அம்மூன்றும் பொன்னும் மணியாலும் இயன்றவை; எனினுங் கம்மியராற் செய்யப்படாதவை. அவற்றைத் தந்த மூன்றரசர்களின் முன்னோர்களும், ஒவ்வொரு காலத்தில் இன்றியமையா வுதவிகளைத் தேவதச்சனாகிய மயனுக்குச் செய்தனர். அவ்வுதவிகளுக்குக் கைம்மாறாக அவர்களுக்கு **மயன்** படைத்துத் தந்தனவாகும் அம்மூன்றும். அவை தம்மைத் திறையாக ஏற்ற **கரிகாலன்**, அவற்றைத் தனது வாழ்க்கைத் தலைநகராகிய **காவிரிப்பூம் பட்டினத்தில்** நாட்டினன். படைப்பின் மேன்மையாலும், பலநாட்டுப் பலவூரின் கண்ணவாகிய அவை ஒரு நாட்டு ஒரு நகரில்வந்து ஒன்றியிருக்கும் அருமையாலும், அவற்றைப் பெரியோரும் போற்றுவர்.

இங்ஙனம் சிறந்த அம்மூன்றினையுந் தன்னகத்துக் கொண்ட புகாரில், உடையவர் காவலிலாது பூட்டு முதலியனவுமின்றி வெளிப்படையாகப் பொன் பொதிந்த மூட்டை முடிச்சுகள் கிடப்பினும் திருட்டுப் போகாமற் காப்பதொரு மன்றம் உண்டு. இம் மன்றத்தின் மகிமையால், உடையவர் பெயரெழுதிக் குறியிட்ட எப்பொருட் பொதியும் வைத்தவை வைத்த விடத்திலேயே பத்திரமா யிருக்கும். உள்ளூரார் எவருங் களவு செய்தலில்லை. அயலூரார் அறியாமல் திருட்டெண்ணங் கொண்டு யாதாமொரு பொருளை எடுப்பாராயின், அதனைத் தலையிற் சுமந்து ஆண்டுச் சுற்றிச் சுற்றித் திரிதலின்றி வெளியிற் கொண்டு போகார். அங்ஙனங் கொண்டுபோக விடாது அறிவை மயக்குவது அம்மன்றம். இதனால் அப் பட்டினத்தில் களவேயில்லை. இதற்கு **வெள்ளிடைமன்றம்** என்று பெயர்.

**(க) வெள்ளிடை மன்றம்.**

இன்னொரு மன்றம், **பொய்கை** யொன்றைப் பக்கத்தே யுடையது. கூனிய வுடம்பினர், செவிடர், தொழுநோயால் (குஷ்டம்) அழுகிய மெய்யினர் ஆகிய பிணிகொண்டோரெல்லாரும் அப்பொய்கையில் மூழ்கி அம் மன்றத்தை வலஞ்செய்யின் பிணிநீங்கி நல்லுடம்பு பெறுவர். இதற்கு **இலஞ்சிமன்றம்** என்று பெயர்.

**(உ) இலஞ்சி மன்றம்.**

மற்றொரு மன்றத்தில், ஒளி வீசுவதொரு நெடிய கல்லுண்டு. இக்கல்லை மும்முறை சுற்றிவந்து வணங்கின், வஞ்சனையால் மருந்திடப் பெற்று மதி மயங்கினோர் மருந்தீடுதீர்ந்து நலம் பெறுவர்; நஞ்சுதின்றோர், பாம்பு தீண்டப் பட்டோர், பேய் பிடிக்கலுற்றோர் என்றின்னோ ரெல்லாம்

**(ங) நெடுங்கல் நின்ற மன்றம்.**

அவ்வத் துன்பங்கள் நீங்கிச் சுகமடைவர். இன்னன துன்ப நீக்கத்துக்குக் காரணமாயது அக்கல்லின் வெளிப்படும் ஒளியேயாம். இவ்வொளி நோயாளர் உடம்பிற் பட்ட மட்டில் நோய் கெட்டோடும். இது **நெடுங்கல் நின்றமன்றம்** எனப்பெறும்.

இனி, நாளங்காடியின் நாற்சந்தி மன்றத்தில் நிற்பது ஒரு பூதம்.

*தவமறைந் தொழுகுந் தன்மையி லாளர்*
*அவமறைந் தொழுகும் அலவைப் பெண்டிர்*
*அறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர்*
*பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென்*
*கைக்கொள் பாசத்துக் கைப்படு வோர்*

**(ச) பூதசதுக்கம்.**

அதாவது :—‘ இழுக்கிய எண்ணத்தை யுள்ளே கொண்டு பலரும் நம்புதற்கேற்ற தவக்கோலத்தை மேனிற்பூண்டு தம்மை உலகு அறிந்துவிடாதவாறு அக் கோலத்தில் மறைந்தொழுகும் தீங்குடை யோர், தம் பாசாங்கினாற் கணவர் தம்மீது ஐயங் கொள்ளா வகை மயக்கிக் கூடாவொழுக்கத்திற் பிறரொடு மருவும் மடவார், தன்னை நம்பிய அரசனைக் கீழறுக்கக் கருதிய அமைச்சர், பிறர் மனைவியரை விரும்பும் பேதையர், பொய்ச் சான்று புகலுவோர், ஒருவனை எதிரிற்போற்றிப் புறத்தே தூற்றுவோர் ஆகிய இவர்கள் என் கையிலுள்ள பாசத்திற் சிக்குவோராவர்’ என்று நாற்காதமும் கேட்கும் வண்ணம் தனது உரத்த குரலால் அப்பூதம் அறிவுறுத்தும். அங்ஙனந் தான் உணர்த்தியதை மீறி யாதாயினுமொரு தீச் செயலை யாரேனும் செய்யின், அவரை அதன் கைப்பாசம் கட்டி யிழுத்துவர, உடனே நிலத்தில் அறைந்து விழுங்கி விடும். இப்பூதம் ஆங்கிருப்பதால் தீ நிகழ்ச்சிகள் நிக

யெடுத்தலில்லை. அது நிற்கும் இடத்துக்குப் **பூதசதுக்கம்** என்றும் அதற்குச் **சதுக்கப்பூதம்** என்றும் பெயர் வழங்கலாயிற்று.

இனி, அரசன் செங்கோல் எக்காரணம் பற்றியேனுங் கோடுமாயின், அல்லது அறங்கூறவையத்தார் எப்போதாவது நடுவுநிலை திறம்பி ஓரவாரத் தீர்ப்புக் கூறுவராயின், நாவால் யாதும் ஓதாது கண்ணீர் சொரிந்து அழாநிற்கும் ஒரு **பாவை**. இப்பாவை நிற்கும் இடம் **பாவைமன்றம்** எனப் பெயர் பெறும்.

**(ரு) பாவை மன்றம்.**

மேலே எண்ணிட்ட ஐந்தையும் **ஐம்பெருமன்றம்** என்று சேர்த்துச் சொல்வதும் உண்டு.

இவையேயன்றி, இந்நகரின் சிறந்த நிலயங்களுட் **சக்கரவாளக்கோட்டமும்** ஒன்று. எல்லா உலகங்களையும் தன்னுள் அடக்கிய கோளத்தைச் சக்கரவாளம் என்பது **பௌத்தநூலார்** வழக்கு. காவிரிப்பூம் பட்டினம் தோன்றிய காலம் முதலாக வுள்ளதொரு **சுடுகாட்டின்** பக்கத்தே யுள்ளது இச் சக்கரவாளக் கோட்டம். இது ஆக்கப்படுதற்கு முன்னெல்லாம் இப்பகுதி **சுடுகாட்டுக் கோட்டமாக** மட்டு மிருந்தது. இச் சுடுகாடு பலவகைக் கட்டடங்களையும் உடையது. இதைத்தொரு நகரமென் றெண்ணிச் **சார்ங்கலன்** என்னும் பார்ப்பனச் சிறுவனொருவன் தனியே அங்குச் சென்றனன். அவன் அங்குக் களித்தாடியவொரு பேயால் அறையப்பட்டு, அலறிச்சென்று, தன் தாயாகிய **கோதமையை** அடைந்து, "அம்மே! சுடலைப் பேய்க்கு உயிரைக் கொடுத்தேன்" என்று வீழ்ந்து இறந்தான். இறந்த மைந்தனைத் தோளிலிட்டு அப் பட்டினத்துக்

**சக்கரவாளக் கோட்டம்.**

காவற்றெய்வமாகிய சம்பாபதி திருமுன் சென்று, "என்
னுயிரை எடுத்துக்கொண்டு என் மகன் உயிரை மீட்டுத்
தந்தருளல் வேண்டும்" என்று கோதமை புலம்பினாள்.
அதற்குச் சம்பாபதி மனமிரங்கி, "போன உயிரை மீட்டுத்
தரல் என்னா லாகுங்காரியமன்று, வருந்தாதே" எனப்
பகர்ந்தனள். "கேட்ட வரங்களைத் தெய்வம் தருமென்பது
நூல் வழக்காகவும் யான் வேண்டிய இவ்வரத்தைத் தந்
தருளாயாயின் இப்பொழுதே உயிர்விடுவேன்" என்று
கோதமை கூறினள். அதற்குச் சம்பாபதி, "ஈண்டுள்ள
தேவர்களில் எவரேனும் நின் விருப்பத்தை நிறைவேற்று
வராயின் யானும் அவ்வண்ணம் செய்தல் கூடும். என் ஆற்
றலைக் காண்பாய்" என்று கூறி நான்குவகை அருவப்பிரம
கணங்களையும், பதினாறுவகை உருவப் பிரமகணங்களையும்,
இரு சுடர்களையும், அறுவகைத் தெய்வ கணங்களையும்,
அசுர கணங்களையும், எண்வகை நரகர்களையும், பல விண்
மீன் கூட்டங்களையும், அசுவினி முதலிய நாட்களையும்,
கோட்களையும் தன்னகத் தடக்கிய சக்கரவாளக் கோட்
டத்தின் வரந்தரு தேவரையெல்லாம் வரவழைத்து, அவள்
முன் நிறுத்தி, "இவள்கொண்ட இன்னல் இதுவாகும்,
இதனைத் தீர்ப்பீராக" என்று மொழிந்தனள். அவர்களும்
போன உயிரை மீட்டளித்தல் தம்மாலாகா தென்று சம்பா
பதி மொழிந்தவாறே சாற்றினர். கோதமை ஒருவாறு
மனந்தெளிந்து மகனைச் சுடுகாட்டிற் சேர்த்துவிட்டு உயிர்
துறந்தாள். பின்னர், சம்பாபதியின் ஆற்றலை உலகினுக்கு
வெளிப்படுத்தவும், எல்லாத் தேவர்களும் ஓரிடத்தில் கூடிய
தன் அறிகுறியாகவும் ஆண்டொரு கோட்டம் சமைப்பித்
தனர். அக்கோட்டம் மேருமலையும், அதைச் சூழ்ந்த ஏழு
மலைகளும், நான்கு பெருந் தீவுகளும், இரண்டாயிரம் சிறு
தீவுகளும், பிற சிறிய இடங்களும், அவற்றில் வாழ்வோர்

களும் அடங்கிய உருவங்களை விளக்கி **மயன்** என்னுந் தெய்வத் தச்சனால் நிருமிக்கப்பட்டது.

**வனங்கள்.**

இனி, காவிரிப்பூம் பட்டினத்தில் இலவந்திகைவனம், உய்யானவனம், சம்பாதிவனம், கவேர வனம், உவவனம் என வழங்கும் பல சோலைகள் உண்டு.

இவற்றுள் **இலவந்திகை வனம்:** இயந்திரங்களைக் கொண்ட குளத்தை அகத்தேயுடையது. அக்குளத்தினைச் சூழ்ந்த பசுஞ் சோலை சோழவேந்தர்கட்கு வேனிலையும், இளந் தென்றலையும் மன்மதன் திறைப் பொருளாக வழங்கினாற் போன்று மலர் பல அலர்ந்து மகிழூட்டுவது; மன்னர் பெருமான் மனைவிமாரோடு சென்று விளையாட்டயர்வது.

**உய்யானவனம்:** பாசத்தைக் கையிற் கொண்ட பூதத்தின் காவலை யுடையது. அவ்வனத்தின் மலர்கள் தேவர்களால் விரும்பப்படுபவை; அம் மலர்கள் வாடுவதில்லை; வண்டு நுகர்வதில்லை.

**சம்பாதிவனம்:** சம்பாதி, சடாயுவொடு உடன் பிறந்த **பறவை.** அவ்விரு பறவைகளுந் தங்களுள் யார் மிக உயரப் பறப்பது என்பதில் மாறுகொண்டு பறக்கலாயின. சம்பாதி மிக உயரச் சென்றமையின் **ஞாயிற்றின்** வெம்மையால் இறகுகள் எரிந்து வீழ்ந்தது. இப்பறவை தங்கியிருந்தமையால் இதற்குச் சம்பாதி வனமென்று பெயர்.

**கவேரவனம்:** காவிரி யாற்றை யீன்றேருளுகிய **கவேரன்** என்னும் அரச ரிஷி யிருந்து தவஞ்செய்த இடமாதலால் அஃது அப்பெயர் பெற்றது.

**உவவனம்:** அருளும் அன்பும் ஆருயிரோம்பும் ஒரு பெருங்கொள்கையும் ஒழியாது, நோன்பு பூண்ட பகவனது ஆணையாற் பூக்கும் பன் மரங்களையுடையது. அவ்வனத்தில்

ஒரு பளிங்குமண்டபம் உண்டு. அது தன்பால் இருப்போரின் ஒலியை வெளிப்படுத்தாமல் உருவைமட்டும் வெளிப்படுத்தும். அம்மண்டபத்தில் மாணிக்கச்சுடர் பரந்ததொரு பதுமபீடம் உளது. அப்பீடத்தில் அரும்புகளையிட்டால் மலரும். பல்லாண்டு கழியினும் அதிலிட்ட மலர்கள் வாடா. அம்மலர்களில் வண்டுகள் மொய்யா. எதனையுங் கருதாது அப்பீடத்தில் மலரைப் பெய்தால் அவை அங்ஙனே கிடக்கும். ஏதேனுமொரு தெய்வத்தை நினைந்து அதிற் பெய்தால் அங்ஙனம் பெய்த மலர்கள் பீடத்தை நீங்கி அத்தெய்வத்தின் அடிகளிற் செல்லா நிற்கும். இது மயனாலாக்கப்பட்டது.

நிற்க, ஒரு நாட்டில் அல்லது ஊரில் சீரும் செல்வமும் அளவு கடந்து சிறந்திருக்குமெனினும் ஆங்குள்ள மகளிர் நலஞ்சிறந்தோ ரல்லரெனிற் பயனில்லை. அறிவுங் கற்புடை மகளிர் இல்லா நாடு வறிய காடேயாகும். ஆதலின், அவ் வகையாலும் பூம்புகார் சிறந்ததென்பதைப் பின்வரும் வரலாறுகள் தெளிவுறுத்துவன வாகும்.

பத்தினிப் பெண்டிர்.

(க) இந் நகரில் அளவில்செல்வத்து வணிகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒரேயொரு மகள்தானுண்டு. இப் பெண் பிறப்பதற்கு முன்பு மதுரையில் மற்றொரு பெண்ணை வதுவைபுரிந்து வாழ்கின்ற தன் மருகனுக்கே தன் மகளையுஞ் செல்வங்களையுங் கொடுப்பலென்று பல்லோரும் அறியக் கூறிக்கொண்டிருந்த அவ்வணிகன், சின்னாளில் உயிர் துறந்தான். அதனை யாற்றாத அவன் மனைவியும் அந் நாளிலே இறந்துபட்டாள். சுற்றத்தார் மதுரைக்கு ஓலை போக்கினர். அவ் வோலைகண்ட மருகன் ஆற்றொணாத் துயரத்தனாகி, அண்டையிலுள்ளார் தேற்றத் தெளிந்து,

காவிரிப்பூம் பட்டினஞ் சென்று, மாமன் இல்லைச் சேர்ந்திருந்தான். மாமன்கருத்தை அவனுக்குக் கிளைஞர் விரும்பினர். அதற்கிணங்கிய அவன், 'தம்மூர்ச் சுற்றத்தார் முன்பு மன்றல் புரிவேன்' என வாக்களித்து, அச் செல்வியையும் செல்வங்களையும் ஏற்றுப் புகாரை நீங்கினான். பொருள் பண்டங்களை யெல்லாம் அவனுடன் வந்த உறவினர்கள், அவன் கட்டளைப்படி எடுத்து முன் சென்றார்கள். இவன் மாமன் மகளோடும் பின் சென்றான். அங்ஙனஞ் சென்றவன், திருப்புறம்பயம் என்னும் பதியை அடைந்து அன்றிரவு அவண் தங்கி வைகறையில் வழிச் செல்வாமெனக் கருதி, வன்னிமரமும் மடைப்பள்ளியும் கோயிலும் கிணறுமுள்ள ஓரிடத்தில் வதிந்து, உணவு சமைத்துண்டு உறங்கலாயினன். உறக்கத்தில் அவனை அரவம் தீண்ட, உடனே விடந்தலைக்கேறி மாண்டான். உற்றதையறிந்த அப்பெண்மணி, இரவெல்லாம் ஏங்கி உருகி அழுதனள். தந்தையைத் தாயை இழந்த தமியள், துணைவன்கதியும் இன்னவாறாயின் என் செய்வாள் பாவம்! துக்கமே உருக்கொண்டதுபோல் தோன்றினாள். காலையில் அவ் வூரும் அறிந்து உருகிற்று.

துணையிழந்த அந்த எளிய பெண்ணுக்கு இரங்கி, இறைவன் எழுந்தருளி, மாண்டு கிடக்கும் வணிகனைக் கடைக்கணித்தருளலும், அவ் விடங்கொண்ட வணிகன் இடங்கொண் டெழுந்தான். இறைவனைக் காணும் தவமுடையாள் அழுகை நீத்தாள்; உவகை பூத்தாள். பின்னர் வணிகன் தனக்கு நேர்ந்த இன்னலை உணர்ந்தான். இருவரும், தம்பொருட்டு இங்ஙனம் கருணைபாலித்த இறைவனைப் பலவாறாகப் புகழ்ந்து போற்றினர். இதுகாறும் அம் மயிலியலாள் அவன் உடம்பைத் தீண்டினாளில்லை. வதுவை யாகாமலன்றி மாமன்மகளாகிய அவளையும், உயிர்க்

கிறுதி நேர்ந்த காலத்திலுங்கூடத் தீண்டுதல் கற்புநெறி யன்றெனக் கருதியிருந்தாள். அப்பொழுது “இவ்விடத் திற்றானே மணஞ்செய்து செல்மின்” என்று இறைவன் அருளலும், அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு, “அண்ணலே! சுற்றத்தார் யாருமில்லாத இவ்விடத்தில், நீயே அடியேங்கட்குத் தாயுந் தந்தையும் ஒக்கலும் பக்கமும்” என்று வணிகன் பணிந்தனன். மணமுடிந்தது. அப்பால் அவர்கள், இறைவனைப் பன்முறை வணங்கி, விடைகொண்டு மதுரை சென்று வாழ்ந்து மகப்பேறும் பெற்றனர். அவன் றன் முதல்மனைவிக்கும் மக்களுண்டு. ஒரு நாள் இருவர் மக்களும் விளையாடுங் கால், மூத்தாள் மக்கள் தன் மைந்தனை அடிக்கவே, அவர்களை அடக்குவான்கருதி, சற்றுக் கடுகடுத்து இளையாள் அதட்டினள். அதுகேட்ட மாற்றாள் கனன்று, “அடீ பேதாய்! நீ என் அருமைமக்களை வைதல் சாலுமோ? நீ யாவள்? நின் ஊர் யாது? நின் தந்தை தாயர் எவர்? நினக்கு மணமுடித்தது எவர் முன்பு? உற்றார் பெற்றார் இன்றி வறிதேயுழன்ற நீ, என் நாயகன் வழியில் கண்டு மயங்கிவந்த காமக்கிழத்தியல்லையோ? என் கணவன் உன்னை வதுவை முறைப்படி கைப்பிடித்தார் என்பதற்குச் சான்றுண்டோ? உண்டேல் காட்டுவாய்; இல்லையாயின் உன் பொல்லாவாயை மூடி அடங்குவாய்” என்று கொடுமொழி கொட்டினள். இளையவள் உளம் நொந்து, “சான்றுகள் உள; அவை திருப்புறம்பயத்து வன்னியுங் கிணறும் இலிங்கமும் மடைப்பள்ளியும்” என்றாள். “ஆ! ஆ!! அப்படியா! ஏற்ற சான்றுகள்தாம். யான் பிச்சி யல்லேன். என்னை உன்னால் ஏமாற்ற வியலாது. நீ சொல்லுவது மெய்யாயின் அவற்றை இங்கே காட்டு பார்ப்போம்” என்று மூத்தாள் வீம்பு கூறினள். இளையாள் யாது செய்வாள்! தன்னந்தனியாளாகிய எனக்கு இறைவனே துணையென்று

மனங்கவன்று சொக்கலிங்கப் பெருமான் திருமுன் சென்று, கற்புத் தெய்வமே நின்று கரைவதுபோல் உள்ளங்கரைந்து, நாத் தழுதழுப்ப "எம்பெருமானே! அடியாள் மணத்துக்குச் சான்றாகிய அவை இங்கே தோன்றி என் இன்னல் தீர்த்தாலன்றி உயிர் வாழேன். எளிமையேன், குலையாத கற்புடையேனாகில் அவை இங்குவர அருள்புரிக" என்று முறையிட்டாள். அப்பொழுது அண்ணலருளால் அவை கோயிலின் ஒரு புறத்தே தோன்றலாயின. உடனே மூத்தாளை அழைத்துவந்து காட்டினாள். ஊராருங்கண்டு புகார் நகரத்தாளைப் புகழ்ந்தனர். அவள் கற்பின் மேம்பாட்டையும் தெய்வ வழிப்பாட்டையும் வியந்தனர். மூத்தாள் வருந்தினள். கணவனும் அவளைப் பழித்தான். தன் கற்புநிலை வெளிப்பட்டது அவளாலே யாகலின், இளையாள் அவளைத் தழுவிக்கொண்டாள். அன்று முதல் இருவரும் ஒத்து வாழ்ந்தனர். *

(உ.) இந் நகரத்தின் காவிரிக் கரையில் ஒருநாட் பல நங்கைகள் கூடி விளையாடினர். அதில் ஒருத்தியைச் சில மகளிர் பார்த்து "அம் பெண்பாவாய்! இதுதான் உன் கணவன்" என்று தாங்கள் புனைந்து விளையாடியதொரு மணற்பாவையைக் காட்டிக் கூறினர். அந் நேரத்தில் குணத்தாள் "கல்லெனினுங் கணவன்" என்ற முறையில் மெய்யேயென்று நம்பினள். அம் மடக் கொடிக்குக் கொழுநனே தெய்வமென்ற கொள்கை இயற்கையாகவே நிரம்பியிருந்த

---

* இவ்வரலாறு இஃதாமாற்றை, செந்தமிழ் தொகுதி—கஉ பகுதி—எ-ல் 'திருவிளையாடற் புராணம் 64-வது படல ஆராய்ச்சி' என்ற தலைப்பின் கீழ், திருப்புறம்பயம் ஸ்ரீமான் T. V. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் எடுத்துக்காட்டிய திருப்புறம்பய புராணம் 6-வது சருக்கச் செய்யுட்களும் பிறவும் விளக்குகின்றன.

மையின் அந்த மணற்பாவை மீது பரிவுகொண்டு தன்னோடு வந்த பெண்களுடன் செல்லாமல், காவிரி நீர் கரைத்து விடாதபடி அதனைக் காத்து நின்றாள். இதுபற்றி அவள் சீரிய **கற்புடையா**ளென்று யாவரும் கொண்டாடினர்.

(௩) சோழன் **கரிகாலன்** மகள் **ஆதிமந்தி** என்பாள் கல்வி கேள்விகளிற் சிறந்தவள். அப்பெருமாட்டி, தன் கணவன் **சேரன் ஆட்டனத்தி**யொடு **கழார்** என்னும் ஊரில் காவிரியாற்றின் துறையில் நீராடுகையில், அவனைக் காவிரி வெள்ளம் கவர்ந்து சென்றது. ஆதிமந்தி காதலனைப் பல பக்கங்களினுந் தேடிக் காணாமல், “கல் நவில் தோளாயோ” எனக் கூவிச் சென்று கடற் கரையிற் புலம்பி நின்றாள். கடலானது **கற்புத்திறன்** மிக்க அப் பெண்மணியின் ஆற்றாமைக் கிரங்கி அவனைக் கரையோரத்திற் கொண்டுவந்து விடுத்தது. இந் நிகழ்ச்சியை யறிந்த **மருதி** என்பாள், நீராடிக் கொண்டிருந்தவள், அச்சேரர் கோமானைக் கண்டு அழைத்து வந்து ஆதிமந்தியோடு கூட்டினாள். கணவன் உயிர் மீட்ட கற்பரசியாம் ஆதிமந்தி களித்துப் பொன்னங்கொடிபோல அவனைத் தழுவிகொண்டு போயினள்.

(௪) மற்றொரு மங்கையின் மணவாளன், வேற்று நாட்டுக்குப் பொருளீட்டற் பொருட்டுக் கப்பலேறிச் சென்றிருந்தான். அவன் மனைவி ‘கொழுநன் வருங்காலம் இந்த எழிலுடம்போ டிருப்போமாயின், நம் கட்டழகைக் கண்டு எவரேனுங் காமுறுதல் கூடும். அங்ஙனம் பிறர் காமுறும் நிலைமையில் நாமிருத்தல் கற்பன்று. பிறர் இச்சிப்பதற்கு உரியதன்று இவ் வுடம்பு. ஆகலின் வேற்றுருவங் கொள்ளலே விரும்பத்தக்கது’ என்று மனவுறுதி கொண்டு கணவன் வரும்வரையில் அடியாட்குக் **கல்லுருவம்** வரத்தக்கதாக வென்று எண்ணினாள். **கற்பு** மங்கையர்க்கு எதுதான்

இயலாதது. அப்பொழுதே அவள் நல்லுருவம் நீங்கிக் கல்லுருவம் பெற்றாள். அவ் வுருவோடு, ஒரு மணமலி பூங்கானலிற் கணவன் வருகையை எதிர்பார்த்து நின்றனள். சில நாட்சென்று அவனும் வந்தான். இவளுங் கல்லுருவம் நீங்கினாள்.

(௫) அப் பட்டினத்தில் ஒருவனுக்கு இரு மனைவிகளிருந்தனர். அவ் விருவருக்கும் இரு பிள்ளைகளுண்டு. அதில் ஒருத்தியின் பிள்ளை கிணற்றில் வீழ்ந்து இறந்தது. அதுகண்ட மற்றவள், 'நமது கணவனிடத்தில் நம்மைப் போன்ற சம உரிமை படைத்த மாற்றாள், குழந்தையை இழந்தாளாக; நாம் மட்டும் குழந்தையோடு குலாவுதல் முறையன்று' என எண்ணித் தன் பிள்ளையையுங் கிணற்றில் தாழ்த்திவிட்டாள். அவளுடைய வீரக் கற்பினாலும், நடுவு நிலைமையாலும், இரு பிள்ளைகளும் உயிருடன் மிதந்து வரலாயின. இருவரும் அம் மக்களை மகிழ்வொடு எடுத்து மருவி வாழ்ந்தனர்.

(௬) இன்னொரு நல்லாள், தன் மணமகன் ஊரி லில்லாத காலத்தில், அயலவன் தன் முகத்தைக் காமக் குறிப்போடு உற்று உற்று நோக்குவதைக் கண்டாள். 'நாம் அழகிய முகம் படைத்ததா லன்றோ அன்னியன் இப்படிப் பார்த்தனன்! நாம் இனியும் இவ் வண்ணமே யிருக்கின் கற்புக்குத் தாழ்வுண்டாகும். இந்த இழுக்கத்துக் கேதுவான முக அழகு நமது ஆருயிர்க் காதலன் வரும் வரையில் வேண்டாம். ஆதலால், குரங்கு முகம் கொள்ளலே தகுதி: அங்ஙனம் ஆகக்கடவது' என நினைத்தாள். அவள் கற்பின் வன்மையால் உடனே குரங்கு முகம் வரப்பெற்றாள்; மணமகன் வருமட்டும் அப்படியே யிருந்து அவன் வந்தவுடன் பழைய எழில் முகத்தை யெடுத்தனள்.

(எ) வேறு இரு சிறுமிகள், மணலிற் சிற்றில் கட்டி விளையாடுங்கால், "எனக்கொரு பெண்ணும் உனக்கொரு ஆணும் பிறந்தால் அவ்விருவரையும் மணமக்களாக்குதற்கு உடன்படுகிறாயா?" என்று ஒருத்தி மற்றொருத்தியைக் கேட்க, அவளும் உடன்பட, இருவரும் அவ்வாறே முடிவு செய்து கொண்டனர். பின்னர், அவ்விருவருக்கும் அவர்கள் பேசிக்கொண்டவாறே பெண்ணும் ஆணும் பிறந்தன. ஆனால், ஆண் குழந்தை முடமாக விருந்தது. அவ்விரு மக்களும் வளர்ந்து மணப்பருவம் எய்தினர். அப்பொழுது, பெண்ணின் தாய் தன் கணவனைநோக்கி, "காதல! நான் இளம்பிராயத்தில் இன்னொளோடு இன்னவாறு சிற்றில்கட்டி விளையாடுகையில் பேசியதுண்டு; பேதைமைப் புத்தியால் இப்படி அறிவிழந்து பேசிய என் மனம் நம் அருமைக்குமரியை முடவனுக்கா கொடுப்பதென்று அலமருகின்றது; யாது செய்வேன்!" என வருந்திக் கூறினாள். இவ்வண்ணம் தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்ட இளங்கொடி, 'இன்றுணக்கென்று நம் தாய் வாக்குச்செய்தபின் ஐயம் ஏன்! அவனுக்கே நாம் உரியோம்' என்று துணிந்தாள்; கோடிப்புடைவையுடுத்தாள்; குழலைவாரிமுடித்தாள்; மணக்கோலம் கொண்டாள்; முடவனைத் தலைவனாகக் கொண்டு வாழ்ந்தாள். இதனால் இத்தகைய பெண்ணின் நிறை திறம்பாச் சொல்லை யாவரும் கொண்டாடினர்.

மேற்கூறிய கற்பரசிகளெல்லாம் காவிரிப்பூம்பட்டினத்தாரே. இவர் போன்ற எண்ணிறந்த பத்தினிப் பெண்டிரை யுடையது அப்பட்டினம்.



இன்பந் துய்த்தல்

மயன் என்னும் தெய்வத் தச்சனால் நிரு மித்து வைத்தது போன்ற மனைப்புறத்திலுள்ள அமளிமிசைச் சென்றிருப்பாராயினர். அப்பொழுது, கோவலன், திருமகள் போலும் நலமிக் காளின் மதிமுகம் பார்த்து,

“மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
காசறு விரையே! கரும்பே! தேனே!
அரும்பெறற் பாவாய்! ஆருயிர் மருந்தே!
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!

நினக்கு உவமை யாது கூறுவேன்! நின் உயர்வை என் னென்று புகழ்வேன்! நினது இன்பச் சுவையை எச்சொற் களால் வருணிப்பேன்! எனது உயிரினுஞ் சிறந்த அருமைக் காதலி! நின்னை,

மலையிடைப் பிறவா மணியே யென்கோ!
அலையிடைப் பிறவா அமிழ்தே யென்கோ!
யாழிடைப் பிறவா இசையே யென்கோ!

அன்னமே! என்னென்ன மொழியினும் என் சொல்லானின் நின் செவ்வியும் இனிமையும் அமையா” என்று இங்ஙனம் பல சொல்லிப் பாராட்டினன். இரவியும் மதியமும் போன் றும், அன்றிலும் அதன்றிலும் போன்றும், உடலும் உயிரும் போன்றும் இருவரும் ஒன்றி வாழ்வாராயினர்.

தனிமனைப் புகுதல்.

இவ்வண்ணம் வாழ்ந்துவரும் நாளில் ஒருநாள் கோவ லன் தாயாகிய பெருமனைக்கிழத்தி கண்ணகியுங் கோவல னும் தனிமனை யிருந்து சுற்றந்தழுவல், துறந்தோர்ப் பேணல், வறியோர்க் கீதல், விருந்து புறந்தருதல் ஆகிய அன்பு, அருள், இன்சொல் முதலியன விளங்க, உரிய மனை யறத்தை மேன்மையுற நடத்தக் காண விரும்பி,

